



## குரு வணக்கம்

शंकरं शंकराचार्यं केशवं बादरायणम् ।
सूत्रभाष्यकृतौ वन्दे भगवन्तौ पुनः पुनः ॥

ஶங்கரம் ஶங்கராசார்யம் கேஶவம் பா₃த₃ராயணம் |
ஸூத்ரபா₄ஷ்யக்ருதௌ வந்தே₃ ப₄க₃வந்தௌ புன: புன: ||

நாரணரே வியாசர்! நற்பிரம்ம சூத்திரத்துக் காரணரே தொடர்ந்துமது காலடியிற் பணிவேனே!

பூரணரே ஈசர் பொருளாயச் சங்கரனார்! வாரணரே தொடர்ந்துமது வாலடியிற் பணிவேனே!

---

## பணிவுரை

“தோடக” எனும் சம்ஸ்கிருத அளபடையில், பகவான் ஆதிசங்கரரைத் தொழுகின்ற, எட்டு குரு வணக்கப் பாடல்களே “தோடகாஷ்டகம்” ஆகும்.

ஆனந்தகிரி என்பவர், ஆச்சார்யார் சங்கரருக்குப் பணிவிடை செய்துவந்த அடியார். எளிமையும், குருவிற்குப் பணிவிடை செய்வதில் மட்டுமே உறுதியும் கொண்டிருந்த ஆனந்தகிரியாருக்கு, ஆச்சார்யாரின் மற்ற சீடர்களைப்போல, ஆழ்ந்த அறிவிலோ, வேதாந்த ஆராய்ச்சியிலோ ஈடுபாடு இல்லை. அதனாலேயோ என்னவோ, அன்னார் அறிவிற் குறையுடையவர் என மற்ற சீடர்கள் நினைத்திருந்தார்கள். அதனால், பகவான் சங்கரர் தனது வேதாந்தப் பாடங்களைத் தொடங்காமல், ஆனந்தகிரியின் வருகைக்காக ஓர்நாள் காத்திருந்த செயல், மற்ற அறிவிற் சிறந்த சீடர்களுக்கு வியப்பாயிருந்தது. ஆனால் சத்குருவிற்குப் பணிசெய்கின்ற தவம் ஒன்றினாலேயே, ஒருவரால் எல்லா அறிவையும், எல்லாப் பயனையும் அடைய முடியும் எனக் காட்டுவதாக, ஆனந்தகிரி அன்று வந்தவுடன், ஆச்சார்யாரைத் தொழுது, எட்டு அரிய பாடல்களைப் பாடினார். அவை `தோடக` எனும் அரிய இலக்கணப்படி, நுண்ணிய ஒலி அளபடைகளால் விளைந்த சம்ஸ்கிருதப் பாடல்கள்.

செம்மொழியாகிய ஸம்ஸ்கிருத மொழியிலே கவிதையின் அடிகள், சொற்கள் இவற்றின் நீளம், ஒலி அளவு எனப் பல நுண்ணிய இலக்கண ஒழுக்கங்கள் இருக்கின்றன. அவற்றுள், “தோடக” என்பது ஒருவகை செய்யுள் அளபடை. இதில் சொற்கள் சீராக,“குறில், குறில், நெடில்” எனும் ஒலி எழுத்துக்களால் அமையும். அப்படிச் சீராக அமைந்த கவிதை இசைக்கப்படும்போது, அது கேட்போருக்கு மிகவும் மகிழ்ச்சியை அளிக்கும். அரிய இவ்வளபடையில் அன்னார் பாடிய பாடல்களை அனைவரும் “தோடகாஷ்டகம்” எனப் புகழ்ந்து, ஆனந்தகிரியாரை “தோடாகாச்சார்யர்” எனப் பெயரிட்டுப் பணிந்து போற்றினர். பகவான் சங்கரர் தாம் அமைத்த ஜ்யோதிர் மடத்தின் முதற் தலைவராக, தோடகாச்சார்யரை நியமித்து, அன்னாரின் புகழை மேலும் உயர்த்தினார். எனவே குருவைச் சரணடைந்தாலே ஒருவருக்கு எல்லாத் திறனும், எல்லாப் பயனும் நன்றாய் விளையும் என்பதையே இவ்வரிய பாடல்கள் உறுதி செய்கின்றன. நன்முனைப்பால், சொல்லும், பொருளும் பிறழாமல், தோடாகாஷ்டகத்தினை தமிழில் வார்க்கச் செய்ததும், ஜகத்குரு சங்கராச்சார்யாரின் திருவருளே ஆகும் எனப் பணிவோம்.

**மீ. ராஜகோபாலன்**

15-09-2016





विदिताखिलशास्त्रसुधाजलधे महितोपनिषत् कथितार्थनिधे ।
हृदये कलये विमलं चरणं भव शंकर देशिक मे शरणम् ॥ १॥

| | |
|---|---|
| விதி3தாகி2லஶாஸ்த்ரஸுதா4ஜலதே4<br>மஹிதோபனிஷத் கதி2தார்த2னிதே4 \|<br>ஹ்ருத3யே கலயே விமலம் சரணம்<br>ப4வ ஶங்கர தே3ஶிக மே ஶரணம் \|\| 1\|\| | மறையா மமுதாந் திறையாய் பவரே!<br>மதியா லதனாட் பொருளா குவரே!<br>மலரா முனதாள் உளமே லணிவேன்!<br>மகிபா குருசங் கரனார் துணையே! (1) |

வேதங்களாகிய அமுதக் கடலை ஆய்ந்தவரே, உபநிடதமாகிய உயரிய வேதாந்தச் செல்வத்தின் பொருளைத் தந்தவரே! நினது மலரடிகளை என் இதயத்தில் அணிவேன். நற்குருவாகிய சங்கரரே எனக்குத் துணையாகட்டும். (1)

करुणावरुणालय पालय मां भवसागरदुःखविदूनहृदम् ।
रचयाखिलदर्शनतत्त्वविदं भव शंकर देशिक मे शरणम् ॥ २॥

| | |
|---|---|
| கருணாவருணாலய பாலய மாம்<br>ப4வஸாக3ரது3:க2விதூ3னஹ்ருத3ம் \|<br>ரசயாகி2லத3ர்ஶனதத்த்வவித3ம்<br>ப4வ ஶங்கர தே3ஶிக மே ஶரணம் \|\| 2\|\| | கடலாங் கருணா கரனே பலவாய்ப்<br>பிறவாங் கடலாற் பிணியா னடையாத்<br>தடமா யறிவாற் றகையே யருள்வாய்!<br>மகிபா குருசங் கரனார் துணையே! (2) |

கருணைக் கடலே, பிறவிக் கடலினால் உள்ளம் நலிந்த எனைக் காப்பாற்றி (விடுதலையைத் தரும்) மெய்யறிவை அருளுங்கள். நற்குருவாகிய சங்கரரே எனக்குத் துணையாகட்டும். (2)

भवता जनता सुहिता भविता निजबोधविचारण चारुमते ।
कलयेश्वरजीवविवेकविदं भव शंकर देशिक मे शरणम् ॥ ३॥

| | |
|---|---|
| ப4வதா ஜனதா ஸுஹிதா ப4விதா<br>நிஜபோ3த4விசாரண சாருமதே \|<br>கலயேஶ்வரஜீவவிவேகவித3ம்<br>ப4வ ஶங்கர தே3ஶிக மே ஶரணம் \|\| 3\|\| | நினதா ளருளாற் சுகமா கிடுவார்<br>தனதா றறிவாற் தனதா ளுணர்வார்!<br>எனையா தலினா லிறையா னெனவே<br>மகிபா குருசங் கரனார் துணையே! (3) |

நினது அருளால், தன்னுள்ளே ஆத்ம ஞானத்தை ஆய்ந்து உணர்ந்தவர்களே, உண்மையில் அமைதியை அடைந்தவர்கள். என்னையும் இறைவனுக்கும் - ஜீவனுக்குமான உறவினை (ஆத்ம-ஞானத்தை) உணரச் செய்யுங்கள். நற்குருவாகிய சங்கரரே எனக்குத் துணையாகட்டும். (3)

भव एव भवानिति मे नितरां समजायत चेतसि कौतुकिता ।
मम वारय मोहमहाजलधिं भव शंकर देशिक मे शरणम् ॥ ४॥

| | |
|---|---|
| ப₄வ ஏவ ப₄வானிதி மே நிதராம்<br>ஸமஜாயத சேதஸி கௌதுகிதா \|<br>மம வாரய மோஹமஹாஜலதி₄ம்<br>ப₄வ ஶங்கர தே₃ஶிக மே ஶரணம் \|\| 4\|\| | அறிவா லுனையே அரனா யறிவேன்!<br>அதனா லிதமா யகமுள் மகிழ்வேன்!<br>பரிவா லரிவாய்ப் படர்வார்த் திரையே!<br>மகிபா குருசங் கரனார் துணையே! (4) |

தாங்களே பரம்பொருள் என எனக்கு உறுதியானதால், என் மனம் களிக்கிறது. என்னுள் கடலாய்ப் பரந்த மதி மயக்கத்தை அழியுங்கள். நற்குருவாகிய சங்கரரே எனக்குத் துணையாகட்டும். (4)

सुकृतेऽधिकृते बहुधा भवतो भविता समदर्शनलालसता ।
अतिदीनमिमं परिपालय मां भव शंकर देशिक मे शरणम् ॥ ५॥

| | |
|---|---|
| ஸுக்ருதே(அ)தி₄க்ருதே ப₃ஹுதா₄<br>ப₄வதோ ப₄விதா ஸமத₃ர்ஶனலாலஸதா \|<br>அதிதீ₃னமிமம் பரிபாலய மாம்<br>ப₄வ ஶங்கர தே₃ஶிக மே ஶரணம் \|\| 5\|\| | பலவா யறமா நலமா யதனாற்<br>பணிவா ரதனா லருளாட் படுவார்<br>பரமா யறிவார் பரிவா லருள்வாய்!<br>மகிபா குருசங் கரனார் துணையே! (5) |

பலவகையில் அறம் பல செய்திருந்தால் மட்டுமே, நினது கருணையால், (ஒருவருக்கு சமனாய்க் காணும் பரந்த நோக்கமும்) பரஅறிவில் ஈடுபாடும் ஏற்படும். (அப்பேறு இல்லாத) துணையற்ற என்னைக் காப்பாற்றுங்கள். நற்குருவாகிய சங்கரரே எனக்குத் துணையாகட்டும். (5)

जगतीमवितुं कलिताकृतयो विचरन्ति महामहसश्छलतः ।
अहिमांशुरिवात्र विभासि गुरो भव शंकर देशिक मे शरणम् ॥ ६॥

| | |
|---|---|
| ஜக₃தீமவிதும் கலிதாக்ருதயோ<br>விசரந்தி மஹாமஹஸஶ்ச₂லத: \|<br>அஹிமாம்ஶுரிவாத்ர விபா₄ஸி கு₃ரோ<br>ப₄வ ஶங்கர தே₃ஶிக மே ஶரணம் \|\| 6\|\| | உலகா ருயர்வா யுருவா கிடவே<br>உருவா யருவா யுனதா ளுரைவார்<br>அலைவா ரவராட் கதிராய் நிதியாய்<br>மகிபா குருசங் கரனார் துணையே! (6) |

உலகைக் காக்க, (தங்களது வழிவந்த) உயர்வானவர்கள் தம்மைப் பெரிதாக வெளியே காட்டிக் கொள்ளாமல் பல வடிவத்திலும் அலைந்து வாழ்கிறார்கள். குருவே! தாங்களே (அவர்களுக்குள்ளே அறிவொளியாகப்) பிரகாசிக்கின்றீர்கள். நற்குருவாகிய சங்கரரே எனக்குத் துணையாகட்டும். (6)





गुरुपुंगव पुंगवकेतन ते समतामयतां नहि कोऽपि सुधीः ।
शरणागतवत्सल तत्त्वनिधे भव शंकर देशिक मे शरणम् ॥ ७॥

| | |
|---|---|
| கு₃ருபுங்க₃வ புங்க₃வகேதன தே<br>ஸமதாமயதாம் நஹி கோ(அ)பி ஸுதீ₄: \|<br>ஶரணாக₃தவத்ஸல தத்த்வனிதே₄<br>ப₄வ ஶங்கர தே₃ஶிக மே ஶரணம் \|\| 7\|\| | **விரிவே குருவே விடையேற் பரனே!<br>இணையா லெவரே இலரே அறிவே!<br>பணிவா ரமுதே! பரமா நிதியே!<br>மகிபா குருசங் கரனார் துணையே! (7)** |

குருவின் குருவான விரிவே! விடையமர் பெருமானே ( எல்லாவற்றுக்கும் விடையாகும் ஒப்பற்ற அறிவால் உயர்ந்தவரே), தங்களுக்கு ஈடான ஞானிகள் எவரும் இல்லை! அண்டியவரை அன்புடன் காப்பவர்! உண்மை நிதியம்! நற்குருவாகிய சங்கரரே எனக்குத் துணையாகட்டும். (7)

विदिता न मया विशदैककला न च किंचन काञ्चनमस्ति गुरो ।
द्रुतमेव विधेहि कृपां सहजां भव शंकर देशिक मे शरणम् ॥ ८॥

| | |
|---|---|
| விதி₃தா ந மயா விஶதை₃ககலா<br>ந ச கிஞ்சன காஞ்சனமஸ்தி கு₃ரோ \|<br>த்₃ருதமேவ விதே₄ஹி க்ருபாம் ஸஹஜாம்<br>ப₄வ ஶங்கர தே₃ஶிக மே ஶரணம் \|\| 8\|\| | **அறிவா லுனையே யறிவே னிலையே!<br>அறவே தெனதே பொருளே திலையே!<br>குருவே அருளே குணமே வியனே!<br>மகிபா குருசங் கரனார் துணையே! (8)** |

பரம்பொருளாகிய தங்களை யான் முழுமையாக அறியவில்லை. எனக்கு (உலகில்) செல்வமெனச் சிறிதும் இல்லை. (எனவே வறியனாகிய எனக்கு) குருவே, நினது இயல்பான இரக்க குணத்தினால் உடனே அருளுங்கள். நற்குருவாகிய சங்கரரே எனக்குத் துணையாகட்டும். (8)

इति श्रीमत्तोटकाचार्यविरचितं
श्रीशङ्करदेशिकाष्टकं सम्पूर्णम् ।

| | |
|---|---|
| இதி ஶ்ரீமத்தோடகாசார்யவிரசிதம்<br>ஶ்ரீஶங்கரதே₃ஶிகாஷ்டகம் ஸம்பூர்ணம். | இவ்வாறு ஶ்ரீ தோடகாச்சார்யர் அருளிய<br>ஶ்ரீ சங்கர தேசிகாஷ்டகம் நிறைவு பெறுகிறது. |

rajjag@gmail.com
www.meenalaya.org